உ

# திருப்புட்குழி

# மணிகண்டேஸ்வரர் மான்மியம்.

இஃது

திருப்புட்குழி, பட்டாபிராம பிள்ளை

அவர்களால் பாடப்பட்டு,

ம-ா-ா-ஸ்ரீ

வடக்குப்பட்டு சு. செங்கல்வராய பிள்ளை, M. A

அவர்களாலும்

ம-ா-ா-ஸ்ரீ

வெண்பாப்புலி திரு. வேலுசாமிபிள்ளை யவர்களாலும்

பார்வையிடப்பட்டது.

சென்னை வேப்பேரி,

நிலைய விவேகானந்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ரிஜிஸ்தர் செய்தது.

[illegible]

3. ஷை மணிகண்டேஸ்வர சுவாமியின் ஆலயத்தை எனது தகப்பனாரின் பிதாமகனான வைத்தியப்பிள்ளையவர்கள் இப்புத்தகத்தில் சொல்லியபடி ஜீர்ணோத்தாரணம் செய்து நித்திய பூஜைகளைச்சிறப்பாக நடத்தி வந்தாரென்றும், பிறகு எனது பாட்டனார் இரத்தினப்பிள்ளை அக்கோயிலின் மதில்களைக் கட்டிப் பூசாக்கிரியைகளை வழுவற நடத்திவரப் பண்ணினாரென்றும், அப்புறம் எனது தகப்பனார் அழகப்பிள்ளையும் ஷை யூர் மிராசுதாரர்களின் ஒப்புதலின்பேரில் வாழைத்தோட்டத்தால் சிலவரும்படி உண்டுபண்ணிப் பூஜையை நடந்தேறச் செய்துவந்தாரென்றும் தெரியவருகிறது. இவ்வித சீர்சிறப்புகள் இடையில் குறைவுபட்டிருப்பதை ஷை ஊரிலுள்ள தனவான்கள் கவனித்துப் பழையபடி நித்திய நைவேத்திய பூஜைமுதலிய தருமங்கள் சிறப்பாக நடக்கும் பொருட்டுத் தக்க முயற்சியும் உதவியும் செய்துவரும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

செய்யூர்
1910 மார்ச்சுமீ 28உ

தி. பட்டாபிராமன்.

## சாற்றுக்கவி.

முகவுரையில்சொன்ன ம-ா-ா ஸ்ரீ, வ. சு. செங்கல்வராய பிள்ளை M. A. அவர்கள் பாடியது.

கருப்பஞ் சாறுங் கற்கண்டுங் கலந்தே அளித்தா னெனுமாறு, திருப்புட் குழிவாழ் சிவன்சரிதை திகழும் பத்திச் சுவையுடனே, விருப்பி லளித்தான் குணங் கல்வி மிக்கோன் சிறந்த பத்திபெனும், இருப்பு மிக் கோன் பட்டாபி ராம னென்னும் திருவாளன்.

———

காஞ்சீபுரம் பச்சையப்பமுதலியார் பாடசாலையில்
தமிழ்ப்பண்டிதர் வெண்பாப்புலி
ம-ா-ா-ஸ்ரீ, தி. சு. வேலுசாமிப் பிள்ளை யவர்கள்
பாடிய

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்தருங் கச்சித் திருநகர் தனக்குத்
திகழ்குட திசையதில் விண்டார
வேர் தரு மரம்பை யென்கனிகளின்மே
விச்சைகொண் டவர்குழாஞ் செறிந்து
கூர்தருந் திருப்புட் குழிதனின் முளைத்த
குலவுமுக் கட்கரும் பான
பேர்தரு மணிகண் டேசர்மான் மியந்தான்
பிறங்கிட வினியசெந் தமிழால்,

அவ்வியற் பதிமன் பட்டாபி ராம
வபிதானன் கருணீக குலத்தோன்

றெவ்வியந் தரச்செய் சேயூர்ப்பந் திரப்ப
திப்புத்தி யோகமா தலைவன்
செவ்விய வடிவுந் தீஞ்சொலும் வாணி
திருநிகர் தன்மக ணயன
நவ்வியங் கணக வல்லிநற் கதிசேர்
ஞாபக நிமித்தஞ்செய் தனனே.

---

உ

திருத்தணிகேசன் துணை.

# திருப்புட்குழி
# மணிகண்டேசுரர் மான்மியம்.

---

## காப்பு

வள்ளிக் கொடிபா ரும் வள்ளி மலைதன்னில்
வள்ள லறுமுகவன் வள்ளிநலங்—கொள்ளக்
* கணிகண் டவனுனவக் கான்வந்தாற் போற்றி
மணிகண்டன் மான்மியஞ்சொல் வாம்.

## பரமசிவம்.

நிச்சதனை யல்லாம லானை யுறைவிச்சித்து நாடிச் சென்றோன், மச்சவுரு வடைந்துளா னந்நியைத்தன் வலிவீசி மடக்கிக் கொண்டோன்; அச்சமுற்று வருவோ னக் காட்செய்த மாபாவமகல வைத்தோன், கச்சபத்தி னருச்சனைக்கே யருளளித்தோ னவன்புகழே கற்று வாழ்வாம்:

## பார்வதிதேவி.

தக்கன்செய் தவத்திரங்கித் தலைவனுரை கட்டளை யைத் தான்மேற்கொண்டு, முக்கண்கொ ளிறையவனை யகன்றுவிதி மகன்மாட்டு முதலிற் றோன்றி, தக்கன்க

---

* கணி-வேங்கையாயும், கண்-கருதத்தக்க, தவன் -தவவடிவமு முள்ள முருகன், உன—உன்ன, நினைத்துவேண்ட.

ணடைந்தபினர்த் தக்கன்மகளெனும்பேரை நான்வேண்டேனென், றக்கணமே மலைமகளாய் வருங்கொடியைப் பசுங்கொடியை யன்பு செய்வாம்.

சுப்பிரமணியர்.

வளப்பமுறு கன்னிகைக் சங்கமதில் மேலான மாட்சிபூண்டும், அளப்பரிய திராவிடமா மரியதமிழ்க் கோர்தெய்வ மாகப்பெற்றுங், குளக்கரையிற் றவங்குலை யச்சிறைபடுநக் கீரன்முறை கூறக்கேட்டே, உளப்பரி வாற் சிறைமீட்டு மொளிர்குமரன் றுளிணையே யுன்னி வாழ்வாம்.

சமய குரவர்.

பாண்டியன்றன் வினைதீர்த்தே யென்பினைப்பெண்
ணுருச்செய்தோன் பாதம்போற்றி
ஆண்டுபணி ரண்டுமுனர் மாய்ந்தவனை யழைப்பித்தோ
னடிகள் போற்றி
தாண்டவன்றன் தண்ணருளாற் கல்லதனின் மிதந்து
வந்தோன் றாள்கள் போற்றி
ஆண்டவனைக் குருந்தடியத் தடியிற்கண் டருள்பெற்றோ
னடிகள் போற்றி.

அவையடக்கம்.

பிள்ளைப் பிறையைத் தரித்துநலம் பீடார் குழியிற் பொலிகின்ற, வெள்ளைச் சேவூர் மணிகண்டன்வியன்மான் மியத்தை யான்சொல்லல், கள்ளப் பூனை கடற்பாலைக் கருதிப் பருகமுயன்று மிகும், உள்ளக் களிப்பிற் கரை யருகே யுலவு தன்மை யொக்குமன்றே.

# புராணம்.

---

## 1. ஜடாயு சருக்கம்.

மான்மகன் மகனே யீன்ற மைந்தர் விண்ணோ ரரக்கர்
மேன்மையா மென்றுசொல்லி மேலுமே லரும்போர் செய
சான்றவ ராகுந் தேவர் தாதலைக் கண்டு மிப்பா [யசு
லான்றவ ரறைந்தவண்ண மழியாமை யடைய வெண்ணி

எண்ணிய தன்மையெய்த வெழுபின்மிகு மரியைப்
பூசை, பண்ணியே பவரொ ரிம்போய்ப் பாற்கட லுற்றுப்
பின்னர்ந், திண்ணிய வெற்பை மத்தாத் தீயமா சுணை
த்தை நாணாக், கண்ணினி லமுதைக் காணக் கடலினைக்
கடைந்தார் வானோர். (2)

கடைந்தனர் வானோர் பாலைக் கண்டதை யவுண
ரோடி, யடைந்தன ரங்குத் தாமு மமுதத்தைப் புசிக்க
வெண்ணி, மிடைந்தனர் மருங்கே சேர்ந்து வேறொரு
பால்கடைந்து நன்றாக், குடைந்தனர் பாலை நாகங்
குலைந்து கக்கிற்று நஞ்சம். (3)

வேறு.

நாகந்தரு விடமானது நாற்பாங்கரும் பரவச்
சோகம்பெறு விண்ணோர் தமைச் சோரீரெனத் தேற்றி
யாகந்தனி லெரியங்கிபோ லெங்கும்விரி விடத்தைப்
போகும்படி யுருமித்துமே புடைசேர்ந்தனன் விண்டு.

வேறு

விட்டுறுவங் னன்வரயும் விடமவரைச் சுட்டநின்ற
கட்டமடைக் கூடன்முழுதுங் காரவண்ண மாகியே
அட்டபுய முடையோனை யங்கனையே யோடியடைக்
கிட்டமுறப் பணிந்தநக விடரதனைத் தீரனருன. (5)

திருமார்ப னிவ்வண்ணந் தீரென்ற வாசகங்கேட்
டுருமாறி மாறன்முன் னுளமுவக்கச் செல்செல்வன்
அருகிருக்குஞ் சுந்தரனை யாங்கேவி யக்கடுமை
செருக்கழித் துத் தம்முன்னே சேர்ப்பிக்கச் செயபினா

வேறு

செப்பினு னாறு மங்கே சென்றுநக தானுமருசா
தப்பெரு கஞ்சைக் கையி லடங்கவக தறுத கங்கை
யப்பினைச் சடையி நருங்கு மையர்முன் விடுப்பவனானுன்
ஒப்புட னுட்கொண் டானே யுன்னுனோ லாரே யுய்வார்?

உய்யவே யாரு மைய னுண்டன கடுவை யதுகுத்
தையலே தடுக்கக் கண்டு த ழ்சடை வள்ள லாரும்
மெய்யிலேமிடற்றினபாலேமேவியேபொலியச்செபதான்
செய்யதோ ரகதா டொட்டுச் சீர்மணிகண்டனானன் (8)

திருடை மணிகண்டேசன் திரிபுர சுந்தரியாகதேவி
யாருட னமருந்தான மணிகண்ட புரமாமங்கே
தாருடை யாககேணேடு சமய்செய்து வீழ்சடாயு
ஆருயி ரிழக்கும்போதவ வீரனை யருச்சித்தானே. (9)

அருச்சனை செயதபசுவிக கரனவனுமைகதேறும்
மருந்தின்மே லுவங்துவக்தே யெதிர்காட்சி கொடுக்க

வப்புள *, திருத்தமாய்ப் பணிந்துபோற்றிச் சிவஞான தருளின்பேற்றால், விருத்தியா யிப்பதிக்கென் பெயரது விளங்கவென்றான். (10)

துதிசெய விவ்வாறாகத் தூயமா மணிகண்டேசன்
கதிபெறத் துதிக்கும்புட்குக் காருண்ய முடையனாய்ப்
பதியினி லருளளித்துப் பதிதனைக் கன்றுதொட்டுப்
பதியிற்புட்குழிப்பேரெனு நம்பான்மையிவி லகவென்றான்

* ஜடாயு இராவணனோடு சண்டைசெய்து விழுந்த இடம் வட திசையி லோரிடத்திலென்றும் அந்த சோலத்தை இவ்வூரில் பக்ஷின் பொருட்டுப் பெருமாள் காட்டியருளினரென்றும் சிலர் கூறுகிறார்கள்.

முற்றிற்று.

---

## II. விஜயராகவப் பெருமாள் சருக்கம்.

குசாதி வனப்புக்கொண்ட கூர்விழிச் சீதைதனைத்
தசசிர மேந்தரக்கன் தன்னகர் சேர்த்தினனைத்
தராதலன் தனயனான தார்வேந்தன் ராமனேந்தி
பரசபர முடையோனேங்கிப் புவியிடைத் தேடிவந்தான்.

வேறு

தேடிவரு ரகுராமன் தேர்ச்சி கொள்ளத்
தெய்வதவப் புட்குழியாக தலத்தைமேவி
ஆடியவம் மணிகண்ட விறைவோன் றன்னை
யடிவணங்கி நிற்கையிலாங் கிருக்கும்புட்டான்

கூடியவன் இராகவன்றன் தாளில் வீழ்ந்து
கொம்பனையா டனையரக்கன் கொடுசெல்சேதி
வாடியவன் றன்மனத்திற் களிப்புக் கொள்ள
வாய்மைமொழி விளம்பினான் சடாயுவென்பான்.

வேறு

உரைசெயும் மாற்றந்தன்னை யுளங்களிப் புறவே கேட்டும். அரைதனி லுழுவைத்தோலை யாடையாக் கொண்டோன்றன்னை, கரைதரு மனத்தினோடுங் கார்வண்ண னருச்சித்தானே, வரைவில்லி மணிகண்டேசன் வரமென்ன வேண்டுமென்றான்.

வேறு

இன்னருட் கரநதிம் பொழிதன்னை யியம்ப
விருநில முண்டவன் கேட்டுத்
தன்னெழிற் றேவி சீதையை மீட்குந்
தந்திரம் யாதெனப் பணிய
அன்னவ டன்னை யபகரித் தோனை
யழித்தவ டன்னை மீட்பதற்குக்
கன்னியை யொருபாற் கொள்மணி கண்டன்
கருதின வரமதைத் தந்தான். (4)

வேறு.

கண்ணுதற் கடவுடந்த கனவர மதனைப்பெற்றுக். கண்ணனவ் விடத்தி னின்று கடந்துபோய்க் கடலைத் தாண்டி, விண்ணவர் துள்ளிபாட விறலிரா வணனை மாய்த்தே, அண்ணலவ் விலங்கைசென்று மனநடை யாளை மீட்டான். (5)

முற்றிற்று.

## III வைத்தியபிள்ளைச் சருக்கம்.

சித்தர்தவம் புகழ்ந்தேத்துங் காஞ்சியின்கணெ
ழுந்தருளுஞ் சித்ரகுத்தர், புத்திரரோரைவர் வழிக்கரு
ணீகர் குலத்துதித்துப் புகழே பூண்ட, அத்திரிகோத
திரத்திலவரு மாமுச்சர் மாவெனும்பேர் மகபன்பெற்ற,
புத்திரர்மூ வருளவைத்யபிள்ளையே சிவநேசம பூண்ட
செல்வன. (1)

செல்வனிவன் தம்பியரோ ரிருவர்தமு மிளையவ
னுஞ் சிவிரான், கல்விநிறை நச்சிக்குக் குடநிசையோ
ரைந் நுகர முதைதூரத்திற், பல்வளமொ டிலங்குதிருப்
புட்குழியிற் சிற்றம்மை பாலிவீகார், நல்லமைப
புதல்வனு யத்தலத்தி னனிமகிழ்ந்து நாடி வாழ்ந்தான.

வேறு

இரைய வோர்தின மன்னவ னத்தலத் திலகு
விரய ராகவ ராலயம் வலம்வரும் வேளை
விரைவி லோரராத் தீண்டிட விறந்தனன் விரைவில
அடைப பார்வர்த முள்ள முமிழ்பமு மகல. (3)

வேறு

தம்பிமடிந்த தறிந்து தமையன்வயித்தியப்பிள்ளை.
வெம்பிக் கர்சிலை நீத்து மேவித் திருப்புட்குழியை, தம்
பிச் சடங்குகள்செய்து தலத்திற் பாட்டியின சொக்கை.
வம்பில் லாமலடைந்து வளப்பத் தோடு மிருந்தார். (4)

வேறு

இவ்வகை யிருந்த சீமா னேற்ற கௌதமக் கோத
ரத்தான், செவ்விய வடக்குப்பட்டிற் றேர்சிவ பக்தி மிக்

கோன், கௌவைதீர் முதல்வன்செல்வன் கற்பகப்பிள்ளை யீன்ற, கொவ்வைவாய்ச் சுந்த ரப்பேர்க் குமரியைத் தம்பி கொள்ள. (5)

ஓகையே காம்ப ரப்பே ரொருதம்பிக் கருமணஞ் செய், தீகையே சிறப்பாக் கொண்ட வேந்தலெம் வைத் யப்பிள்ளை, ஓகையோ டதற்கு முன்னே யுயர்குணங் கலனாப்பூண்ட, தோகையாம் பெருந்தே விப்பேர்ச் சுமதியைவதுவைசெய்தார். (6)

வேறு.

மணக்தம் மங்கை தன்னான் மகவா மூன்றை யீன்றார்
அணங்கே யனைய பெண்க ளவரோ ரிருவர் பின்னால்
குணமே நலமாக் கொண்ட கொண்டல் ரத்ன மென்பான்
வணமே நிறையிம் மூவர் வளர்ந்தா ரழகாய் மன்னோ(7)

வேறு.

வளர்ந்த விம்மக்க ளாண்பெணோர் மூவரில்
வான்செல் கூர்விழித் தாமமென் கார்குழல்
தளர்க்க நாலிடைப் பெண்க ளிருவருந்
தார்கொள் கற்பக பிள்ளை யவர்தரு
துளங்கு நெஞ்சிலா மைந்தர்க ளவரில்
சோமசுந்தர னென்னும் பெயருள
வளங்கள் மிக்குள செல்வன் புகழ்தழீஇ
வாழ்ந்தி ருந்தனர் மேதினி யின்கணே. (8)

வேறு.

இவ்வித மாகச் சொன்ன வைந்திறை யீந்து மேற்றும்
எவ்வித மாக வைத்துப் பிள்ளையை யினிது கேட்டும்

அவ்வரிக குகந்ததானந் தடைவைக்க வெண்ணமில்லான்
செவ்விய கற்பகப்பேர்ச் செல்வனுங் கீர்த்தி மிக்கோன்.

புதிய விளங்கு வைத்யா புண்ய கற்பகத்தை நோக்கி, நீதியின் மிக்கோரொன்று நிகழ்த்துவலபாயனை கேட்டிட, பாதுகா வெம்மூர்க் கேகி யியம்புதிரென்ன வேண்ட, கோதிலாத் தனதுள் ளத்தைக் கூறுதற் கிசைந்தான் மன்னே. (10)

வேறு

முன்னொருநாட் சம்பரனைத் தொலைத்துப் பின்னர்
முனைபோலப் புரந்தரனுக் கரசு தந்த
மன்னர்தச ரதனென சக்ரவர்த்தி
மைந்தர்களில் ராமனெழிற் றேவிக்காக
அன்னவிரா வணனொடுபோர் செய்து வீழ்ந்தே
யரணபாத மகத்திருந்துஞ் சடாயுப் புட்டான
இன்னுயிரைத் துறந்தவதக் குழியூர் தன்னி
லீசனமர் கோயிலிலே யென்று சொல்வீ. (11)

வேறு.

செவ்வையா யிரவு தன்னிற் சிவதரி சனஞ்செய் யாமல
வவ்வள வடிசி லேனு மிசைந்துண வெண்ண மில்லேன
அவ்விவ காரந் தன்னா லவண்வர விசையேனென்றே
இவ்வித மாற்றஞ் சாற்றி யிருந்தனன் சீல முற்றோன்.

ஓதிய மொழிகடம்மை யுளந்தனிற் கொண்டுமெய்ப் பாலாதியீறில்லான் தன்னையலைகடலடைத்த கோமான் தீதிலாப் புள்ளைச் சுட்டதிருப்பதி தனிற்ருபிக்கப், பேதியாவிருப்பங் கொண்டான் பெருந்தகை குழியூருள்ளான். (13)

வேறு.

குழியூரான் விரும்பியவிவ் விடயந்தன்னைக்
கோதறவே முடிப்பிக்கக் கருணைகூர்ந்து
செழிப்புடனத் தலத்துக்குக் கிழைவீதித்
திசையதனில் வீற்றிருக்கும் முக்கட் செல்வன்
பழிப்பற்ற வைத்தியன்றன் கனவிற் றோன்றிப்
பாருய்யத் தாமிருக்குந் தானஞ் செப்ப
விழித்துக்கொண் டக்கணமே யத்திகோத்ரன்
விடமுண்டோன் விளங்குமிடந்தேட லுற்றான். ()

வேறு.

தேடலுற்றோன் களிப்பெய்தக் கண்டகனுவழு வாது திகழச்செவ்வி, கூடரும்பு மலர்த்தாரோன் தங்கு திருவீதிதனில் குணதுதிக்கில், மாடதன்மே லூர் வோனை மண்மூடி முட்சூழ்ந்து மறைக்கக் கண்டே, ஆடலுற்றான் மனக்களிப்பா லாலயத்தைச் சீர்திருத்த அவாவுங்கொண்டான். (15)

அவாவடைந்தோன் மாசின்றிக் கற்றுணர்ந்தே யெரியோம்பு மந்தணாளர், தவாதவகை யறைந்த தோத்ருத்தமமா நன்னாளிற் றமியன்றானே, சிவாலயத்தைப் புதுப்பித்துக் கும்பாபிடேகமுதற் சிறுஞ்செய்து, உவாவுடையைப் போர்த்தவன்மீ திவ்வாறு தோத்திரங்களுவந்து சொற்றான். (16)

மைப்படி கண்டாபோற்றி மதிமுடியணிந்தாய் போற்றி, செப்பரி தானசீர்த்திச்சேவேறும் பெருமான்

போற்றி, ஒப்பறு மணிகண்டேச வொளிகொண்ட
கண்ணபோற்றி, தப்புகளனைத்துஞ்செய்யுந்தனியனேற்
கருள்செய்வாயே. (17)

பருவதராஜனுக்குப் பார்புகழ் மகளாய்வந்தப்
பருவதராஜன் கொண்டபலகுறை யகற்றிப்பின்னர்ப்
பருவத வில்லினுன்றன் பாலிடப் பாகஞ் சேர்ந்த
திரிபுர சுந்தரித்தாய் நீயனேன் தன்னைக்காப்பாய். ()

வேறு.

அன்னை யப்பனு மாகுநீ யிருவரு மதனால்,
என்னை யிப்படி யிடரினில் விடுத்திடில் யாவும்,
என்ன செய்குவ னெவரொடு சொல்லுவ னெந்தாய்
உன்னை யன்றிமற் றுறுதுணை யெளியனேற் குண்டோ ()

அடியரை யன்று காக்க வாலால முண்ட கண்டா
துடியிடை யுமையோர் பாகந் துலங்குமெம் மீசபோற்றி
கொடியபா தகனேன் றன்னைக் குழைமன மாக்கி நின்ற
னடியிணை சிந்தை செய்ய வனைத்துள காலங்காக்க. ()

---

## நாமாவளி.

அண்ணு மலைவா ழற்புதனே
அறுமுகத் தவனுன் னற்கதனே
ஆலங் காட்டினி லாடிய பாதா
ஆறு மதி சென்னி சூடிய நாதா
இமையோரை யன்று காத்தவனே
இந்திரன் பழியைத் தீர்த்தவனே
ஈன்றளித் தழித்தற் குரியோனே

ஈரடி காண்கிலன் கரியோனே
எம்பே யணியாக் கொண்டவனே
எரிதரு விடத்தை முன் உண்டவனே
ஏறுடை யரசே விண்ணாரீச
ஏனேற னினாதி யெண்கிரசே
ஐயாற் றரசே யழியா வமுதே
ஐயா வெனதா ருயிரு முமதே
ஒற்றி யூரினில் விளங்குந் தியாகா
ஒண்டொடி பிடிநடையுமையொரு பாகா
ஓது நாவுக் கரசை யுண்டவனே
ஓலமென்பவருக் கருள் தருபவனே
ஒளவியமானவை யெனையணு காதே
ஒளடதமொன் றினி நீ வழு வாதே
கருணா கரனே சுகவடிவே
கண்டே தேனே மறைமுடிவே
காமனைக் கண்ணாற் காய்ந்தவனே
காமரு பைந்தமி ழாராய்ந்தவனே
கிருபா கடலே சங்கரி நேயா
கிரிவளை வில்லாக் கொண்டருள் தூயா
கீரனுக் கிலக்கணஞ் சொன்னவனே
கீழ்வே ளூருறை முன்னவனே
குற்றா லத்தி லுற்றவனே
கும்பிடு மவர்வினை செற்றவனே
கூடலை யாற்றூரில் மறைந்தவனே
கூலிக்கு மண்ணைச்சுமந்தவனே
கெஞ்சு மடியரைக் காப்பவனே

கெடுமதி தீர்த்தருள் சேர்ப்பவனே
கேட்பவர் வரங்களைக் கொடுப்பவனே
கேழ்மிகுபுலியத ளுடுப்பவனே
கைலையி னரசே விண்ணரசே
கைதனில் மழுமான் கொள்ளரசே
கொடியிடை யிளமுலையுமை மணவாளா
கொதியம னழிபட வுதைதரு தாளா
கோகன்னத்திற் குழை சேவகனே
கோலக் குழகன் நின் சேய் குகனே
கௌதம முநியர் தொழு முதல்வோனே
கௌவைகள் தீர்த்தருள் தந்தருள் வோனே
சங்கரி மகிழுந் தற்பரனே
சந்தத மென்னையாள் சிற்பரனே
சாமவே தப்பிரிய சாம்பசிவா
சார்ந்தவர் போக்குவர் தத்தமவா
சிதம்பர வாசா சிற்சபை யீசா
சிவசிவ சிவசிவ வெங்கள் நடேசா
சீகாழி வந்தருள் சற்குரு நாதா
சீரான நின்னரு ளெனக்கு முன் னீதா
சுந்தரன் தோழா ஜொலிக்கும் பொற்பாதா
சுடர்மணி பொலிதரு காலத்தி நாதா
சூலா யுதனே செஞ்சடை தரனே
சூகரவெயிற்றைப் புனைபரம் பரனே
செங்கல்வ ராயனைத் தருபரம் பொருளே
செல்வத்துட் செல்வ நின்திரு வருளே
சேயினைக் குருவாக் கொண்டவனே

சேடன்விடத்தை முன் னுண்டவனே
சைல நகர்வாழ் சடைமுடித் தேவே
சைவ சமயிகள் நாடிடுங் கோவே
சொக்க லிங்கமே சோதியே வாவா
சொற்ப முனை நினைந் தானு நீ வாவா
சோம சுந்தர நீல கந்தர வாதியே
சோதி மந்திர மூல தந்திர நீதியே
சௌந்தரவல்லி சமேதனே மூலனே
சௌரியவீர கபாலியே யாலனே
ஞானபோதத் தனி இன்பக்கடலே
ஞானசம்பந்தருக் கமுதளி கடலே
தண்டாயுதனைத் தரு சர்வேசா
தாழ்சடை தனிற் புனல் தரிக்கும் பிரகாசா
நடன சபாபதி நற்குண வாளா
நாயகி பார்ப்பதி திருமண வாளா
பர்வத ராஜன் மகள் மகிழ் நாதா
பார்வதி பாகா பங்கயப் பாதா
மணிகண் டேசா மாதுமை பங்கா
மாறன் பிரம்படிக் கிணங்கிய வங்கா
யக்யங் களினுறை மந்திர மூலா
யாகா தியில்வரு மதிபதி சூலா
ரத்தின சபையி னடித்தருள் மணியே
ராமர் போற்றிடு புட்குழி மணியே
லங்கை வேந்தனை முன் னழச்செய் தவனே
லாப முள்ளவழி யெனக்கருள் பவனே
வல்லாள னுக்கன்று வாய்த்தநற் சுதனே

வாத வூரர்தொழ வருளுநற் பதனே
தணிகா சலனவன் தாதையே தெய்வம்
சார்ந்தினி மேலவன் பணியே செய்வம்
வேதாந்த நாதா விரும்புஞ்சர் வேசா
வைத்திய நாதா வேளூர் வாசா
திரிபுர சுந்தரி மணவாளா
திருப்புட் குழிவாழ் குணவாளா
மணிகண் டேசா அபயம் அபயம்
அபயம் அபயம் அபயம் அபயம் **(21)**

உளப்பரிவோ டவன்புகழையிவ்வாறுக
வுரைத்து முனம் வணங்கியவவ் வைத்ய பிள்ளைக்
களப்பரிய சந்தானஞ் செல்வ மப்போ
தகமுவந்து மணிகண்ட வீசன்றந்து
வளப்பமுறு மச்செல்வம் வழியே யென்று
மாறும லொருவன்பின் னவன்சேய் பெற்றுத்
திளைப்பனென வழுவாத வண்ணஞ் சொல்லிச்
செஞ்சடையோன் வரங்கள்பல நல்கிட்டானே. **(22)**

வாழி.

வாழி மணிகண் டேசனும் வாழி திரிபுர சுந்தரியும்
வாழி விடையும் ராகவனும் வாழி சடாயு பட்சியும்
வாழி கற்பகப் பிள்ளையும் வாழி யவன்றன் பின்னோரும்
வாழி வைத்திய பிள்ளையும் வாழி யவன்கால் வரு
[வோரும். **(23)**

முற்றிற்று.

திருத்தணிகேசன் திருவடி வாழ்க.

## விபூதி அத்தியாயம்.

விபூதியை உண்டாக்கும் வழிமூன்று விதமாகும். அவை கற்பவிதி, அநுகற்விபதி, உபகற்பவிதி என்பவைகளே.

கற்பவிதி:—1. கன்றினையீன்ற நாள் சமீபமான பசு
2. கன்றீனாத கன்னிப்பசு
3. நோயுள்ள பசு
4. கிழப்பசு
5. கன்றிழந்த தாய்ப்பசு
6. மலந்தின்னும் பசு
7. மலட்டுப் பசு
8. வால் }
9. காது } இவை பின்னப்பட்ட பசு
10. கொம்பு }

இப்பத்து வகையல்லாத கறவல் பசுக்களில் பங்குனிமாசம் சம்பாத்தாளை மேய்ந்து செம்மை, வெண்மை முதலிய நிறத்தினால் அழகும் நற்குணமுமுள்ள பசுக்களின் சாணத்தை அஷ்டமி, பூரணை சதுர்த்தசி இம்மூன்று திதிகளில் பூமியில் விழுமுன் பரிசுத்தமுள்ளவர்கள் சத்தியோசாதமந்திரஞ்சொல்லி மிருதுவான தாமரையிலையில் ஏந்தி அதின்மேலிருக்கும் வழும்பினை யொழித்துப் பழுது என்பது சிறிதுமின்றிக் கொண்டு வந்து அதில் வாமமந்திரஞ்சொல்லி பஞ்சகவ்வியம் வார்த்து அகோர மந்திரஞ்சொல்லிப் பிசைந்து தற்புருடமந்திரஞ்சொல்லிக்கையாலுருட்டி அப்பொழுதே வெய்ய ஓமத்தீயில் சம்பாநெற்பதருடன் வைத்துப்பிறகு

பக்குவங்கண்டு ஈசானமந்திரஞ்சொல்லி எடுக்கவேண்டும். இவ்வாறு எடுத்த விபூதியைக் கோடிவஸ்திரத்தில் வடிகட்டி ஒரு புதுப்பாண்டத்திற் சேர்த்து விதி தவறாமல் விபூதிகாயத்ரி மந்திரஞ்சொல்லி இதுவே கதியென்று பூமியில்வைத்து வாசனையுள்ள மலர்சாத்தி வெள்ளை வஸ்திரத்தினால் அப்பாண்டத்தின் வாயைக் கட்டவேண்டும். இவ்விதமாகச் சொன்ன கற்பவிதியே உத்தமமானது.

இவ்வகையை அன்றெடுத்த சாணத்தை யன்றே யுருட்டி அன்றே ஓமாக்கினியிலிட்டு உண்டாக்கினாலும் எடுத்த சாணத்தைக் கொண்டுபோயுலர்த்தி வேறே உண்டாக்கினாலும் சிறந்ததாகுமென்று வேறொரு விதமாயுங் கூறுவர்.

அநுகற்பதி:— சித்திரை மாசத்தில் நெருங்கிய வனத்திற் சென்று அங்கே யுலர்ந்திருக்கிற சாணத்தை யெடுத்துக்கொண்டு போய் இடித்து அதில் பசுவின் கோமயத்தை வார்த்துப் பிசைந்தெடுத்து உருட்டி உண்மைத் தவசிகள் முன் சொல்லிய மந்திரப்படி உண்டாக்குவார்கள்.

உபகற்பவிதி:—பெரிய வனமானது இயற்கையாகத் தீப்பற்றிக் கொள்ளுதலினாலுண்டாகிய பொடியைப் பஞ்சகவ்வியம் பெய்து முன்மந்திரஞ்சொல்லி ஓமாக்கினியில் ஆகமவிதிப்

படி யுருட்டி வைத்து மேற்சொன்ன பரிசுத்தமுள்ளவர்கள் விளைவிப்பார்கள்.

நிறம்:—இவ்விதமாக உண்டாக்கப்படும் விபூதி நீலநிறமாயிருக்குமானால் கொடிய பிணியைத்தரும்; கருமை நிறமாயு மிருந்த செம்மை நிறமாயுமிருக்கின் வாழ்நாளைப்போக்கும்; சிவப்பு நிறமாய் இருந்தால் புகழை நீக்கும்; மஞ்சள் நிறமானால் வறுமை புண்டாக்கும். இந்த நிறங்களல்லாமல் வெண்மை நிறமதிகமானால் அளவில்லாத புண்ணியத்தைக் கொடுக்கும். இத்தன்மையான வெண்மை நிறமுள்ள விபூதியை 12 அங்குல நீளமும் 8-அங்குல அகலமுமுள்ள வஸ்திரத்தினாலாவது, கொழுமையுள்ள புலித்தோலினாலாவது, பெண்மான் தோலினாலாவது, வாய் வட்டமாகச் செய்யப்பட்ட பையில் பெரியோர்கள் அமைத்து வைப்பார்கள்.

விபூதிதரிக்கும் முறை:—திருநீற்றைத் தரித்துக்கொள்ளுகையில் * இக்குறியிற் காட்டிய வழிடங்களில் முதலில் உத்தூளனமாய்த் தடவி பின்பு மேற்சொன்ன இடங்களில் நெற்றியில் தரிக்கும்போது கைவிரல்களில் நடுவிரலை விட்டு மோதிர விரலாலும் சுட்டுவிரலாலும் குற்றமறத்தரித்துப் பின்பு பெருவிரலால் நடுவே எதிராக அணிய வேண்டும்.

* 1. சிரசு
2. நெற்றி
3. கழுத்து
4. தோள்
5. மார்பு
6. தொப்புள்
7. முதுகு

† இவ்வாறு தரிக்கப்படுவதே திரிபுண்டரமாகும். திரிபுண்டரமாகிய மூன்று கீற்றுக்களுக்கு மத்தியில் ஒரு விரல் அளவு இடம் விட்டிருக்கவேண்டும்,

நெற்றியில் புருவத்தினளவு வரையில் தரிக்கவேண்டும். நெற்றியிலும் மார்பிலும் புயத்திலும் ஆறங்குல நீட்சியாகவும் மற்றவுறுப்புக்களில் ஒரு அங்குலநீளமுள்ளதாயும் அணியவேண்டும்.

அழுக்குப்படல், தளமாயிருத்தல், ஒரு கீற்றினடுவில் கொஞ்சம்படாமலிருத்தல், வளைவாயிடல், தரிக்குமிடத்தில் ஒன்றுக்கொன்று மிகப்பிரிதல், ஒன்றோடொன்று கலத்தல், ஆக இந்த ஆறுகுற்றமும் விளங்கும்படி திருநீறு அணிந்தால்குற்றமென்று பெரியோர்சொல்லுவார்கள். விலைக்குக் கொண்ட விபூதி, ஒரு கையில் வாங்கின விபூதி, வேற்றிடத்திற் கண்டவிபூதி, தீக்ஷை பெற்றவர்கள் கொண்டுவந்து கூட்டிய விபூதி, தலையை அசைத்தும் கவிழ்ந்தும் வாயைத்திறந்தும் கால் நடந்தும் இவ்வித அலைவினால் இயல்பின்றி யணிந்த விபூதி ஆகிய இத்தகையவிபூதி அணியத்தகாதது. பரமசிவத்தின் சந்நிதியிலும், வேதவிதிப்படி செய்யும் யாகத்தின் முன்னிலும், ஆசாரியர் சந்நிதியிலும் திருநீறணிந்தல் குற்றமாகும்.

† குழைத்துத் தைவந் ததற்பின்னர்க்குழைத்த நீற்றை வெண்ணிலவி, விழைத்த தென்னைச் சொன்னவிடத் தியற்றும் பொழுதி னெற்றியின்கண், டழைத்த விரலினடுநீக்கி யத்தற்சனியாலனாமிகையாற், பிழைத்த லறவே தரித்தெதிராப்பெரிய விரலானடுவணிந்தால், அதுவே திரிபுண்டர முறைத்தவங்க மவையேயிடனாகும்.

பிராமணர் முதலான மூன்று வருணத்தாருக்கும் சிவாலயத்தில் யாகத்தீயில் விளைந்த நீறும் சூத்திரர்களுக்கு மடைப்பள்ளியிலுண்டான நீறும், இந்த நான்கு வருணத்தாரல்லாத அநுலோமர் பிரதிலோமர் முதலிய மற்ற வருணத்தாருக்குக் காட்டுத் தீயாலுண்டான நீறும் உரியவை யென்றும், பிராமணர்கள் சிரசு முதல் பாதமீறாக உத்தூளனமாயும் க்ஷத்திரியர்கள் நாபிக்கு மேலும் வைசியர்கள் பட்டம் போலும் சூத்திரர்கள் மூன்றுவிரல் கொண்டு வரியாகவும் அணிவார்கள் என்றும் ஆகமமாகிய கடல் சொல்லுகின்றது.

விபூதிக்குள்ள பெயர்கள்:—குற்றமெல்லாம் நீறாகச்செய்யுந்தன்மையால் நீறு, மேலான சோதியைத் தருவதால் பசிதம், தொகுத்தல் வாழ்க்கையைத் தருவதால் பூதி, காப்பதினால் காப்பு, மனமலமாகிய குற்றத்தை நீக்குவதால் அகோரம் என்று சொல்லப்படும்.

மகிமை:—எல்லாப் பொருள்களிருந்தும் அக்கினியில்லாவிட்டால் யாகம் நடவாததுபோல மந்திரம் தவம், தியானம், சாஸ்திரம், பூசனை, வந்தனை, என்கிற எந்தமுறைமையிலாவது ஒரு முறையால் பரமசிவத்தைத் தியானஞ் செய்தாலும் விபூதி யணியாமல் செய்ய இயலாது. விபூதியின் தன்மையையறிந்து அதனையணியாதவர்கள் நன்மார்க்கத்தை நீங்கிய பதிதர்

களாய் விடுவார்கள். பிராமணர்களுள் திருநீறிடாத முகம் சுடுகாடுபோலாம். அவ்வித முகத்தைப் பார்த்தால் நல்லோர்கள் நூறுதரம் (பலமுறை) பஞ்சாட்சரம் செபிப்பார்கள்.

(1) திருக்கழுக்குன்றபுராணத்தில்,

"நீற்றினறன்மையை யறிந்துநீ றணிந்திலார் திகழ்த்து
மாற்றி னீங்கிய பதிதராய்விடுவ ரந்தணர்க்கு
மேற்ற பூதிய திடா முகமிம மம்முகத்தைத்
தோற்ற நோக்கினா றஞ்செழுத் தோதுவர் தூயோர்."
[எனவும்

(2) திருவாசகத்தில்,

"பிணியெலாம் வரினு மஞ்சேன்
பிறப்பினோ டிறப்பு மஞ்சேன்
துணிநிலா வணியி னான்றன்
றொழும்பரோ டழுந்தி யம்மால்
திணிநிலம் பிளந்துங் காணாச்
சேவடி பரவி வெண்ணீ
றணிகிலா தவரைக் கண்டா
லம்மநா மஞ்சு மாறே."
[எனவும்

வரும் செய்யுள்களாலு முணர்க. இதுவன்றியும், ஓர் அரக்கன் காட்டில் திரிந்து கண்டவர்களைக்கொன்று தின்றுவருகையில் வாமதேவர் என்னும் ஒரு முனிவரை ஒரு தினங்கண்டு அவரையும் பக்ஷிக்கவெண்ணி அவரிடம்போய் அவரைத்தன் இரண்டு கைகளினாலெடுக்கின போது அப் பரிசுத்த முனிவரது தேகத்திலிருந்த

விபூதி அந்த ராக்ஷதனுடைய சரீரத்திற் பட்டமாத்திரத்தில் அவனது கோரரூபமும் பாபமுந்தொலைந்து மன்மதன்போலப் பிரகாசித்துத்தன்னிட பூர்வ ஜன்மங்கள் இருபத்தைந்தையும் தெரிந்துகொண்டு புநிதனுயி னுன் என்று பிரமோத்தரகாண்டத்தில் விபூதி மகிமையுரைத்த அத்தியாயத்தாலும், திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் "மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு" என்பதை முதலாகவுடைய திருநீற்று பதிகம் ஓதி கூன் பாண்டியராஜாவின் சுரத்தைப்போக்கின சரித்திரத்தாலும் இவ்விபூதியினுடைய பெருமையும் மகிமையும் நன்கு விளங்கும்.

விபூதி அத்தியாயம் முற்றிற்று.

---

## உருத்திராக்ஷம்.

திரிபுரத்திலிருந்த அவுணர்களால் வருந்தியோடின பிரமன் விஷ்ணுமுதலான தேவர்கள் அரிபதவஞ்செய்ததால் பரமசிவம் வியந்து அங்குச்சென்று ஆயிரம் வருஷம் கடைக்கண்நோக்கினுர். இவ்வாறு பரமசிவம் திருக்கண்களை யிமையாமல் நோக்கினதால் அக்கண்களிலிருந்து குளிர்ச்சி பொருந்திய நீர்த்துளி சிந்தினதால் அந்தப்பூமியில் புண்ணிய சொரூபமான பரிசுத்தமுள்ள ருத்திராக்ஷமரம் முளைத்தெழுந்தது. அன்றுமுதல் ருத்திராட்சமென்னும் பெயர் உண்டாயிற்று. அது சிவப்பு, பொன், கருமை, வெண்மை என நான்குவித நிறங்கள் ஆயிற்று

வெண்மை நிறமுள்ளது ... ... பிராமணசாதி
சிவப்பு நிறமுள்ளது ... ... க்ஷத்திரியசாதி
இவ்விரண்டுங் கலந்துள்ளது ... வைசியசாதி
கறுப்பு நிறமுள்ளது ... ... சூத்திரஜாதி

என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

இதுவன்றி இவ்வுருத்திராக்ஷம் 38 வகையுள்ளது அதாவது:—

ஒரு முகமுள்ளது ... ... சிவசொரூபம்
(பிராமண ஸ்திரீயைக்கொலை செய்த பாதகத்தை நீக்கும்.)

இரண்டு முகமுள்ளது ... ... சிவசக்தி சொரூபம்
(பல கோவத்திகளை யொழிக்கும்)

மூன்றுமுக முள்ளது அக்கினிதேவன் சொரூபம்
(ஸ்திரீ அத்தியை யொழிக்கும்)

நான்குமுக முள்ளது ... பிரமதேவ சொரூபம்
(நிரகத்தினின்றும் நீக்கும்)

ஐந்துமுக முள்ளது ... ...காலருத்திர சொரூபம்
(தகாத புசிப்பினாலும்பொய்முகமா யுரித்தல்லாத புணர்ச்சியினாலுமுண்டாகுந் தோஷத்தைப்போக்கும்)

ஆறுமுக முள்ளது...சுப்பிரமணியக் கடவுள் சொரூபம்
வலக்கரத்தில் தரிக்கத்தக்கது
(* புருண அத்தியை யொழிக்கும்)

ஏழுமுகமுள்ளது ... ... ஆதிசேஷசொரூபம்
(கோவத்தி போர்க்களக்கொலை இவைகளைப்போக்கும்)

* சோரத்தனத்தினால் பெற்ற பிள்ளையைக் கொலை செய்தல்.

எட்டு முகமுள்ளது ... ... விநாயகர் சொரூபம்

(பொருள், பூமி முதலாகிய தானம் வாங்குதலா லுண்டாகும் பாவத்தையும் பிறன்கைச்சோறு உண்பதினாலுண்டாகும் பாதகத்தையும் உண்மகிழ்ந்திரத்தலி னாலுண்டாகும் பாதகத்தையும்நீக்கும்.)

ஒன்பது முகமுள்ளது ... ... வயிரவ சொரூபம்

இடக்கரத்தில் அணியத்தக்கது .

(தக்ஷகன் முதலான சர்ப்பங்களை முன் ஜன்மத்தில் பிடித்துக் கொன்ற பாவத்தைப்போக்கி மோட்சங்கொடுக்கும்)

பத்து முகமுள்ளது ... ... திருமால் சொரூபம்

( 27 நட்சத்திரங்கள், நவக்கிரகங்கள், பெரிய பூதங்கள், பசாசுகள், பிரமராக்ஷதன், இவைகளாலுண்டாகும் பயம் முதலான எல்லா குற்றத்தையும் நீக்கும்.)

பதினொரு முகமுள்ளது ... ஏகாதசருத்திர சொரூபம்

(ஆயிரம் அஸ்வமேதயாக பலனுக்கும் நூறாயிரம் கோதானங்களைத் தக்க திரவியத்துடன் கொடுக்கும் பலனுக்கும் ஒப்பாகும்.)

பனிரண்டு முகமுள்ளது ... துவாதசாதித்தர் சொரூபம்

(அஸ்வமேதமும் பசுமேதமும் பொன்மேருதானமும் செய்வதின் பெரும் பலன் கிடைக்கும்.)

பதின்மூன்று முகமுள்ளது ... கந்தர் சொரூபம்

(காம சிந்தையில்லாத மற்ற இஷ்டகாமியங்களையும் ரசவாத பொன்னையும் பழியில்லாத வெற்றியையும் கொடுக்கும். தாய் தந்தை சகோதரர் இவர்களுக்கு சதிசெய்த பாதகத்தையும் நீக்கும்.)

பதினான்கு முகமுள்ளது ... சிவசக்திகளின் சொரூபம்.

(வாழக்கடவை யென்று முனிவர்களும் தேவர்களும் மற்றயாவரும்தொழும்படி வசிய மென்பதனைக்கொடுத்து ஊழிகாலத்திலு மழியாத மோட்சலோகத்தில் சேர்க்கும்

இது கிடைப்பது அரியது. கிடைக்கு மாகில் ஞானிகள் தங்கள் கண்டத்தில் தரிக்கத்தக்கது; சிவம் சக்திமந்திரம் முதலான வைகளையொப்பானது; பெரும்படை வெற்றியுங்கொடுக்கும்.)

தரிக்கும் காலம்:— வைதிகவிதி செய்யுந்தோறும், சந்தியாவந்தனம் செய்யுங் காலத்திலும், ருத்திராக்ஷமணியைத்தரித்துக்கொண்டால் வைதிகவிதி செய்யும்பலன் அனந்தமாகக் கிடைக்கும். ருத்திராட்சம் தரிக்காமல் செய்தால் துன்பமுண்டாகும், பலனுண்டாகாது. வைதிககருமஞ் செய்யும் பிராமணர்களுக்கு முப்புரிநூல் எப்படியின்றியமையாததோ அவ்வாறே, திரிபுண்டரமாக விபூதியணியும் பிராமணர்களுக்கும் ருத்திராக்ஷம் அவசியம் என்றுசொல்லப்படுகிறது. ஆகையால் அதனை நீங்காமல் தரித்திலரானால் ஸ்நானம் செய்தல், பிதிர்களுக்குத் தில தருப்பணஞ்செய்தல், கையால் வாரிகொடுத்தலாகிய தானம், வேத முதலியவை ஓதுதல், சிவார்ச்சனை செய்தல் முதலான மற்றவைகளாலும் கதிகிடையாது.

தரிக்கும் முறை:— குடுமியில் ஒன்று
சிரசில் முப்பத்தாறு
கண்டத்தில் முப்பத்திரண்டு
மார்பில் ஐம்பது
கையில் பதினாறு
கைமணிக்கட்டில் பனிரண்டு
தாழ்வடங்கள் நூற்றெட்டு

(இவ்விதமாக அணிதல் வேண்டும். இவ்வாறுவிளங்கும் கண்டி கையுடன்நடக்கும் ஓரடிக்கு ஒரு அஸ்வமேதயாக பலனுண்டாகும்.)

பலன்:—அநாமிகை, மத்திமை, தர்சனி, அங்குட்டம் எனச்சேரும் இவ்விரல்களால் செபவடத்தை நடத்தினால் வியாதியறுதல், திரவியம் சேருதல், பகைவரை நீக்குதல், முத்திபைப்பொருந்துதல் ஆகிய இந்த பலன்கள் உண்டாகும்.

| | | | |
|---|---|---|---|
| வீட்டிலிருந்து...ஜெபஞ்செய்தால் | | | ஒருபங்கு |
| பசுவினஞ் சேருந்தொழுவத்தில | | ஷ்ஷ | பத்துப்பங்கு |
| பஞ்சாக்கினி மத்தியில் | ஷ்ஷ | ஷ்ஷ | நூறுபங்கு |
| ஆலயத்துள் | ஷ்ஷ | ஷ்ஷ | ஆயிரம்பங்கு |
| காட்டில் | ஷ்ஷ | ஷ்ஷ | லட்சம்பங்கு |
| மலையினிடத்தில் | ஷ்ஷ | ஷ்ஷ | கோடிபங்கு |
| பரமசிவனது சந்நிதியில் | ஷ்ஷ | ஷ்ஷ | அளப்பரிய |

பலன் உண்டாகும்.

குடுமியில் அணிந்தால் கோடி, காதில் ஒருபது கோடி, கண்டத்தில் ஆயிரங்கோடி, கரத்தில் அனந்தங் கோடி; ருத்திராக்ஷத்தைப் பார்த்தால் லக்ஷம், பரிசித்

தால் கோடி, சாஸ்திரவிதிப்படி யணிந்தால் ஆயிரம் கோடி, ஜெபம் செய்தால் அனந்தம் இவ்விதமாக பலன் உண்டாகும். உருத்திராக்ஷமணிமை அணிகின்றவர்கள் பரமசிவனை யொப்பாவார்கள். பிறருடைய பகைக்கு அடங்கித் தாழார்கள். நாய்க்கு ஒருபோது தரித்தாலும் நற்கதி கொடுக்கும் இதனை, பிரமோத்ரகாண்டத்தில் மாணநதை என்னும் தாசியிடத்தில் வளர்ந்த குரங்கும் கோழியும் உருத்திராக்ஷம் அணிந்துகொண்டிருந்த தன்மையால் மறுஜன்மத்தில் காஸ்மீரதேசத்தரசனுன பத்திரசேனனதுகுமாரனும் மந்திரியின் குமாரனுகவும் முறையே பிறந்து நற்குண நல்லொழுக்கமுடையவர்களாய் அரசாண்டு சிவபக்தியில் சிறந்து கடையில் நற்கதியடைந்தார்கள் என்ற சரித்திரத்தாலுமறிந்து கொள்ளலாம்.

உருத்திராக்ஷ அத்தியாயம் முற்றிற்று.

---

## சிவதரிசனம்.

சிவலிங்கமே சிவசொரூபமாகும். பசுமண், சுடுமண், மணல், சிலை, லோகம், ரத்தினம், சுயம்பு, ரசம், பவளமணிகள், தீபம், பளிங்கு, காந்தம் இப்பனிரண்டு உருவினுலும் இலிங்கமாகும்.

முச்சுடர், வெண்மணல், களிமண், அரிசிமா, விபூதி, நல்லகும்பம், கொன்றைமலர், தருப்பை, வில்வம், பால், வேதிகை, சுவரிலெழுதிய சித்திரம், எள்ளு, நீர்,

கோமயம் இவைகளைச் சிவலிங்கமாகப்பாவித்துப் பூசை செய்வது எளியது.

எட்டு கோணபீடங்களும் வெள்ளை நிறமாயுமுள்ளது பிராமணர்களும், ஆறு கோணபீடங்களும் சிவப்புநிறமாயுமுள்ளது க்ஷத்திரியர்களும், நாலு கோணபீடங்களும் பொன்னிறமாயுமுள்ளது வைசியர்களும், வட்டமாயும் கறுப்புநிறமாயுமுள்ளது சூத்திரர்களும் பூசைசெய்வதற் குரியவை. இந்தமுறைமைப்படி கிடைப்பதரிதாகுமானால்கருமைநிறமாயும்வட்டமாயுமுள்ளதே நான்கு வருணத்தாருக்கு முரியதாகும். பீடங்கள் பனிரண்டு அங்குலமுதல் ஒரு அங்குலவளவு இறுதியாக சூத்திரர் முதலிய நான்குவருணத்தாருக்கு மும்மூன்று சிவலிங்கமாகும். பூசைசெய்து கொண்டிருக்கும் சிவலிங்கம் நன்றாயில்லையென்று நீக்கிவிட்டு வேறொன்று அழகாயிருக்கிறதென்று பூசைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது. இலிங்கம் மூன்றுவகையாகும், அவை தேவலிங்கம், ஆருஷலிங்கம், வாணலிங்கம்.

1. தேவலிங்கம் ⎫ தேவர்களாலும் முனிவர்களாலும்
2. ஆருஷலிங்கம் ⎭ அருச்சனை செய்யப்பட்டவை.

3. வாணலிங்கம் :—வாணாசுரனால் அருச்சித்துத் தொழப்பட்டது. இது மூன்றுதரம் நிறுத்து ஒருதரம்போலவே நிறைசரிபடாமலிருப்பது. நம்மையாளுடைய பரமசிவம் இந்த வாணலிங்கத்தைவிட்டு வேறிடத்திலிரார்.

பூசை செய்பவர்களுக்கு ஒருலிங்கம், மூன்றுலிங்கம், ஐந்துலிங்கம் சிறப்புடையதாகும். இரண்டுலிங்கம் நான்குலிங்கம் அருச்சித்தால் பெரும்பிணியுண்டாகும். ரசலிங்கம் ஒன்றே மற்ற பத்துகோடிலிங்கங்களுக்கொப்பாகும்; அது உண்மையாகவே ஞானத்தையும் மோட்சத்தையுங் கொடுக்கும். திருமஞ்சன நீரைப் பணிந்து உள்ளுக்குக் கொண்டால் உயிர்களுக்குக் காவலாகும். அதைப்பழித்தால் மீளாத நரகமுண்டாகும். மரண காலத்தில் அந்நீர் உண்ணப்பட்டால் பாவவதையைத் தொலைத்துப் பரமசிவத்துடன் வீற்றிருக்கச் செய்யும். நீக்கவேண்டிய வாணலிங்கம்:—

| | |
|---|---|
| சராசரத்திருக்கும் வடிவுள்ளது | புத்திரனையும் மனையாளையுமாய்க்கும் |
| கோணியுள்ளது | மனைவியை மாய்க்கும் |
| உச்சியில் குழியுள்ளது | கொல்விக்கும் |
| கீற்றுயிருப்பது | வெட்டுவிக்கும் |
| காகத்தின் கால்போலுள்ளது | கழுத்தையறுப்பிக்கும் |
| களங்கமுள்ளது | க்ஷயரோகமுண்டாக்கும் |
| விந்துபோல் சுழியுள்ளது | நட்டப்க்கேடுண்டாக்கும் |

இவையல்லாமல் மிகச்சிறிதும் பெரிதும் ஆகாது என்றும் வேதங்கள் சொல்லுகின்றன.

எல்லா நூல்களைக் கற்றுணர்ந்தாலும், எல்லா சிறப்புக்களைப் பெற்றிருந்தாலும், திருமகள் வாசமாயிருந்தாலும், பூலோகத்தையும் தேவலோகத்தையும் பெற்றிருந்தாலும், சிவனை தரிசித்துப் பூசைசெய்யாதவர்கள் நற்கதியடைதல் எத்தன்மையதென்றால் டணிமழையால் குளம் நிறைவதை யொப்பாகும். தேவேந்திர பதவி

முதலிய எல்லாசிறப்புகளும்மகிமைகளும்சிவனதுகடைக் கண்பார்வையினு லுண்டாவதன்றி வேறில்லை. இதனை,

1. வண்டுளரும் தண்டுழாய் மாயோனிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்
அண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்க்கிலையால்.

2. கைதவன்கரந்துவைகுங் கடலைவெற்படக்குங்கையிற்,
பெய்துழூந் தெல்லைத் தாக்கிப் பருகினான் பிறைசேர்
சென்னி, யையன தருளைப் பெற்றார்க் கதிசயமீதென்
கொன்மூன்று, வையமுத் தொழிலுஞ் செய்ய வல்லவ
ரவரேயன்றோ.

என்ற திருவிளையாட்டுப்புராணச் செய்யுள்களினாலும் நந்தனார் சிதம்பரஞ்சென்று சிவதரிசனம் செய்யத்தன் ஆண்டவனை உத்திரவு கேட்டபோது நிலங்கள் எல்லாவற்றிலும் நடவுநட்டு முடித்துப் பின்புபோகும்படி விடைகொடுக்க அதுகேட்டு அவ்வேலை முழுதுஞ் சீக்கிரத்தில்முடியாதே என்றும், எப்போதுபோய் சிதம்பரநாதனைத் தரிசிக்கக்கூடும் என்றும், மனக்கவலையோடிருந்தபோது பரமசிவத்தின் கிருபையால் ஓர் இரவில் அவ்வயல்களெல்லாம் நடவு நடப்பட்டிருந்த அதிசயத்தாலும் நன்கு உணரலாம்.

இத்தகைய சிவபெருமானைப் பிரதோஷகாலத்தில் பணிதல் மேன்மையானது. பதின்மூன்றாந்திதியாகிய திரயோதசிதிதி நாளில் சூரியன் மேற்கடலில் விழுமுன் மூன்றேமுக்கால் நாழிகை, விழுந்தபின்

மூன்றேமுக்கால் நாழிகை—ஆக இரண்டு பங்காகிய ஒரு ஜாமப்பொழுதே பிரதோஷகாலமென்று ஸ்மிருதிசாஸ்திரங்கள் சொல்லுகின்றன. இந்த வேளையில் பிரமா, விஷ்ணு முதலான தேவர்கள் பரமசிவனது சதாநந்த நிருத்தத்தைத்தரிசிக்கச் சிவாலயத்தைச் சேர்ந்திருக்கிறார்களென்றால் அப்பிரதோஷ காலத்தின் பெருமையைச் சொல்லமுடியுமோ? அக்காலத்தில் பிரமவிஷ்ணுக்களை வணங்கி பூசைசெய்பவர்கள் நாகமடைவார்கள்: பிரதோஷம் சனிவாரத்தில் நேருமாகில் அது அதிக சிலாக்கியமானது. பிரதோஷதினத்தில் சர்வரை வணங்கி,

தாயவிடை சண்டன்விடை சோமசூத் திரம்விடையைத்
தொழுது பின்னுஞ்
சேயசண்ட னடிபணிந்து திரும்பவுமச் சோமசூத்
திரம்போய் மீண்டு
மேயசண்டனுடன் விடையையணங்கிவொருவலமாயிவ்
விதியாற் செய்க
வாயபிர தோடத்தி னடிக் கொரயமேதம் வினை
யனைத்தும் போமால்

என்று திருக்கழுக்குன்றப் புராணத்திற் சொல்லியபடி பிரதக்ஷிணம்செய்து மூன்றுக்குக் குறையாமல் அந்த விதிப்படி வலஞ்செய்யவேண்டும். இதனுடைய பெருமையும் மகிமையும் அடியில் விவரித்திருக்கும் பிரமோத்ர காண்டச்சரித்திரங்களால் நன்குவிளங்கும்.

**1.** உச்சினிபட்டணத்தி னரசனான சந்திரசேனமகாராசன் சனிப்பிரதோஷத்தில் சிவபெருமானைத்

தியானஞ்செய்த தன்மையால் பகையரசர்களை வென்று அரசாளும் நாளில் ஒரு பிரதோஷதினத்தில் ஈஸ்வரனை அவ்வரசன் தொழுவதைக்கண்ட அவ்வூரில் ஆயர் குலத்தில் பிறந்த ஒருமாதின் புத்திரன் அவ்வீசனைத் தானும் அருச்சிக்க வெண்ணி மணலையும் பச்சிலைகளையும் பூசாதிரவியங்களாக வுபயோகித்துக்கொண்டு சொல்லுக்கடங்காத தன்மையாகப் பூசைசெய்து நிஷ்டையிலிருந்தான். அவனைச் சாப்பாட்டுக் கழைத்தும் அதைக் கவனியாமல் அவன் நிஷ்டையிலேயே யிருப்பதைப் பார்த்த தாயானவள் கோபித்து அடித்து அவன் பூசித்த லிங்கத்தையும் எடுத்து எறியவே அவன் பதைபதைத்து மூர்ச்சையாகப், பிறகு விழித்துக்கொண்டு தன் வீடு முழுதும் நவரத்தினமயமாய்ப் பிரகாசித்துத் தேவேந்திரன் கோயில்போலவும், இலிங்கம் சோதி சொரூபமாயும், விளங்குவதைப் பார்த்து அவன் ஆநந்தக் கூத்தாடுவதை அரசன் கேள்வியுற்றுப் பிராமணர் முதலானோர் புடைசூழவந்து பார்த்து அப்புதல்வனைத் தழுவி ஆயர் குலத்துக்கெல்லாம் அவனே இறைவன் ஆகக்கடவனென்று புகழ்ந்து ஆசி கூறிக்கொண்டிருக்கையில் அநுமார் வந்து அப்பிள்ளையை மார்பில் அணைத்து சனிப்பிரதோஷத்தில் பரமசிவனைக் குறித்து அவன் செய்த பூசாபலமானது சொல்லும் அளவையுடையதோ? முதலைவாயினின்றும் ஒரு காட்டானையை ரக்ஷித்த மகாவிஷ்ணு கிருஷ்ணனாக அவதாரம்செய்

யும்போது அவனை வளர்ப்பதற்காக இந்தப் பிள்ளையின் எட்டாந்தலை முறையில் * நந்தகோபாலன் என்று ஒருவன் தோன்றுவானென்று ஆசீர்வதித்து மறைந்து போனான். அப்புத்திரனும் நெடுங்காலமவனியில் பரமனது திருவடிகளைப் பூசித்து சிரஞ்சீயானந்த மோக்ஷமடைந்தான்.

**2.** விதாபபோதக் தத்பாகிபாக்ய சத்தியாதன் என்பவன் போர்முகத்தில் பகைவர்களால் கொல்லப்பட்டு வீரசொர்க்கம் சேர்ந்து தேவஸ்திரீகளுடன் இன்ப மநுபவித்துக் கொண்டிருக்க அவனது மனைவியான சதியென்பவள் தன் புருஷன் இறந்ததைக் கேட்டு அலறிப்பூது அன்றிரவிலேயே அவ்வூரைவிட்டு துன்பம் என்பது ஒன்றேயன்றி வேறொருவரையுந் துணை

* பிரமோத்தர காண்டம்:—

36 கோபாலர்தங் குலச்சேயினைக் குளிர்மார்புற வணைத்தே
பூபாலர்கள் கேண்மமன்னுறு பொருளொன்றையு முணரா
மாபாலனிங் கிவன்செய்திடு வழிபாட்டினும் மகிழ்ந்தே
காபாலிவந் தருள்செய்தமை கண்டீரிவை யெல்லாம்,

37. இறைசந்திர சேனன்புவி யேழும் புக ழூரவோன்
அறையுஞ்சனி வாரப் பிர தோடந் தனி னரனை
மறையின்படி வழிபட்டமை கணடிங்கன மதலை
பொறையொன்றிய மனத்தாற்புரி பூசாபலம் போலும்.

38. அப்பூசனை கண்டார்பெறம் பேறித துணை யளவோ
இப்போதிவன் வழியாவரு மெட்டாந்தலை முறையிற்
கைப்போதக மழைக்கும்மழை கார்வண்ணனை வளர்ப்பான்
மெய்ப்போதத்து நந்தனெனும் கோன்றோன் றுவன்விளங்க,

யாகக் காணுதவளாய் மேற்குத்திசை நோக்கிப்போய் வருத்தப்பட்டு ஒரு காட்டிற் சேர்ந்து ஒரு தடாகத்தின் கரையையடைந்தபோது கர்ப்பிணியாயிருந்த அவள் கருப்பவேதனை அதிகமாய் உடனே ஒரு சிறந்தபுத்திரனைப்பெற்றுக் கரையில் வைத்துவிட்டு நீர் உண்ணும் பொருட்டுக் குளத்திலிறங்கின மாத்திரத்தில் ஒரு முதலை அவளை இரையாக்கிக்கொண்டது. அச்சமயம் உமையென்னும் ஒரு பிராமணஸ்திரீ தனது ஒரு வருஷத்திய ஆண் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு அந்தக் குளக்கரையை யடைந்து கரையில் அழுகிற சிசுவைக்கண்டு இரக்கமுற்று யோசித்துக் கொண்டிருக்கையில், குடையுங் கமண்டலமுமுள்ள ஒரு ரிஷி சொன்னசொல்லின்படி அந்த சிசுவையெடுத்துக் கொண்டுபோய்த் தன் பிள்ளையைப்போலப் பாவித்து இரண்டு குழந்தைகளையும் தரித்திரத்தின் கொடுமையால் பிச்சையெடுத்து உபநயனம் செய்வித்தும் வேதம் முதலியன ஓதுவித்தும் வளர்த்துவருகையில் சாண்டில்லியர் என்னும் ரிஷி உமையென்பவளிடம் வந்து இளைய புத்திரனுடைய உற்பத்தி முதலியவைகளைச் சொல்லி முன்பிறப்பில் பரமசிவத்தின் பூசையை ஆரம்பித்து மத்தியில் நிறுத்திவிட்டதினால் இப்பிறப்பில் இந்த கஷ்டம் நேர்ந்தது என்று உரைத்து பிரதோஷதினத்தில் அவ்விரண்டு பிள்ளைகளும் பரமசிவனை விதிப்படி அருச்சிப்பார்களானால் மூத்தவன் தரித்திரம் நீங்கிச்சுகமடைவானென்றும் இளையவன் தன் தகப்பனிழந்த அரசாக்ஷியை மறுபடி பெறுவான் என்றும் தெரிவித்தார்.

இதைக்கேட்ட அவ்விரண்டு பிள்ளைகளும் அப்பெரியவர் சொன்ன முறைமைப்படி சிவபெருமானைப் பிரதோஷதினத்தில் பூசித்துவரும்நாளில் மூத்தபிள்ளை ஒரு தினம் ஒரு நதிதீரத்தில் திரவியம் நிறைந்தகுடம் ஒன்றுகண்டு எடுத்துவந்து தாயிடங்கொடுத்து வறுமையினின்றும் நீங்கினன். சிலநாளின்பின் சிவகாருணியமுள்ள சிவபெருமான் கட்டளைப்படி வண்ணம் ஒரு கந்தருவனானவன் இளையகுமாரனான இராஜகுமாரனை ஒருநந்தவனத்திற்கண்டு சிவபெருமானது கட்டளையைத் தெரிவித்துத் தன குமாரத்தியை யவனுக்கு மணஞ் செய்வித்து வேண்டிய காலாட்படை முதலியவைகளை உதவிசெய்து அவனது தேசமாகிய விதர்ப்பதேசத்துக்குப்போய அரசுபெற்றுச் சுகமாக வாழக்கடவையென்று ஆசீர்வதித்துத் தம்பதிசமேதமாயனுப்ப அந்த ராஜகுமாரனும் மனைவியுடன் விதர்ப்பதேசம் சென்று அப்போதங்குள்ள அரசனை வென்று தன தகப்பன் அரசாட்சியைத்தான் அடைந்து தன்னை வளர்த்த தாயாரையும தமையனையும் ஆதரித்துச்சுகமாய் வாழ்ந்திருந்தான்.

ஆகையால் சிவபெருமானையே தெய்வமாகக் கொண்டு * சந்தேகத்தைக் கொள்ளாமல் பூரண நம்பிக்கையுடன தரிசித்துவந்தால் இருவினையினின்றும் நீங்கி சுகமாயிருக்கலாமெனபது திண்ணமாகும். பரமசிவத்தைத் தரிசிக்கும்போது, கிழக்கு மேற்கு நோக்

* பிரமபாவனையை மூடிபேதங்காட்டுவதஞ் ஞானம்
குரவன் வாக்கிய நம்பாமல் குழம்புவதாஞ் சந்தேகம்
திரமறுசகமெய்யென்றுந் தேகநானென்று முள்ளே
விரவியயோகந்தானே விபரீதமென்பர் மேலோர்.

கிய சந்நிதிகளில் வடக்கு முகமாய் நின்றுகொண்டும், தெற்கு வாக்கு நோக்கிய சந்நிதிகளில் கிழக்குமுகம் பார்த்து நின்றுகொண்டும் தரிசிக்கவேண்டும். தெற்கு வடக்கு நோக்கிய சந்நிதிகளில் சூரியனுக்கு நேராகக் காலை நீட்டிச் சேவிக்கக் கூடாதென்பதைக் கவனிக்க வேண்டும்.

சிவதரிசன அத்தியாயம் முற்றிற்று

திருத்தணிகேசன் றுணை

# அநுபந்தம்.

---

இப்புத்தகத்திலுள்ள பாடல்கள் திருத்தப்பட்டிருக்கும்போது, புத்தி கூர்மையிற் சிறந்தவளாயும் தேவாரம், திருவாசகம், திருப்புகழ், அருட்பா, கந்தபுராணம் முதலிய பாடல்களையே கவனித்துக்கொண்டிருந்தவளாயுமுள்ள எனது அருமைக் குமாரத்தி கனகவல்லி அம்மாள் பிரசவித்து சாதாரண சுரத்துடனிருப்பதுபோலிருந்து எவ்விதமான குறிப்புமில்லாமல் கடைசிவரையில் நல்லறிவோடிருந்து 1909வரு டிசம்பர்மீ 15உ இரவு பத்துமணிக்கு ஒரே நீண்ட சுவாசம் விட்டுச் சிவபதமடைந்தாள். அவள் ஞாபகார்த்தமாக இப்புத்தகம் இவ்வுலகில் பொலியும்படிக்குச் சிவபெருமான் அருள் செய்வாராக.

பண்ணிசையோ டிறைபுகழைப் பகருஞ் செல்வம்
பண்பார்ந்த செல்வமெனக் கொண்ட வென்றன்
கண்மணியே பொற்கொடியே கனகவல்லி
கனிவோடு தேவார முதல வோதும்
பெண்மணியே மினல்போலத் தோன்றி அந்தோ
பிரிந்தனையே என்கருதி இங்ஙன் செய்தாய்
மண்மிசையே யாக்கையது நிலையா தென்று
மையலறத் தெரிவிக்கக் கருதி னையோ
அல்லது மற்றெது கருதி இங்ஙன் செய்தாய்?
அரசே! பெண்ணரசே! யான் இனி எப்போது

நல்லவுன தெழில் முகமும் நடையுஞ் சீரும்
நன்னலமும் புன்னகையுங் காண்பேன் அந்தோ
வல்லவர்கள் மெலிந்தாருக் குதவல் வேண்டும்
மாதரசே வல்லவள்நீ ஆதலாலே
ஒல்லும் வகை எங்குலத்துக் குதவியாக
உத்தமியே நீயிருத்தல் வேண்டும் வேண்டும்.

மங்கை ரத்னம் போல்வாளென் மகளாஞ் செல்வி கனகவல்லி
எங்கை சேர இவ்வுலகம் இகந்து பரம னடிசார்ந்தாள்
கங்கை முடியிற் றரித்தான்றன் கதையே செப்பும் இந்நூல்தான்
இங்கே அவள்ஞா பகமாக என்றும் நின்று நிலவுகவே.

சிவபெருமான் திருவடிகளே சரணம்.

1910வரு மேமீ 15உ
சேயூர்.

தி. பட்டாபிராமன்.